தபவுதிகங்களையுமுண்டாக்கிக்கொண்டு- பிரத்தி யட்சமாகப்பிரகிருதி யிருக்கையிற்பிரமம் நிஷ் ட்பிரகிருதிஎன்பதெப்படிஎன்னில்.

(உ-ம்.) பழுதையிற்சர்ப்பமொருக்காலுமில் லையென்றாற்போலவுஞ்சொப்பனபிரபஞ்சங்கண் டவறிவைத்தவிரவற்பமுமில்லையென்றாற்போலவு ம்வாசாரம்பமாய்த்தோற்றுகிற மூலப்பிரகிரு தியும்பிரயத்தைத்தவிரவற்பமுமில்லையென்கிற யுத்தியாலுஞ்சாக்கிர சொப்பனப்பிரபஞ்சமெ ல்லாம்நாள்தோறும் அதைக் காண்கிறவறிவுமா த்திரமாகவழியக்கண்டிருந்து மிதனைத்தவிரப் புறமென்றுகண்டிருக்கிறவனான்மாவைக் கெ டுத்தபடியாலான்மக் கொலைக்காரனென்றும் பி ரமத்தைக்கெடுத்தபடியாற் பிரமக்கொலைக்கார னென்றுமித்தனையுந்தன்வடிவாகக் கண்டவனே பிரமமென்றும் வேதஞ்சொன்னபடி யாலும் நாம்நிஷ்டப்பிரகிருதியென்றறிக. (சஅ)

அசம்சாரி.

மாயாகற்பிதமானசகத்திற்கற்பிதமானவர்ணாசி ரமபேதங்களுமதற்குச் சொன்னதன்மாதன்ம பேதங்களுமதன்பலமானநரக சொர்க்காதிகளு மதின்சேஷமானசனன மரணாதிகளுஞ்சமுசார மென்றுசொல்லப்படுந்தேகத்தைநாமென்றவ பிமானத்தால் நமக்குத்தோற்றுந் தேகத்தைவி டநாம்வேறென்றுவிவேகம் பண்ணின பேர்கா ர்களுக்குமுதலாய்ச்சமுசாரமில்லை- அவனையுந்



தேகத்தையுமித்தையென்று கண்டவனுக்குமப்பா ற்பட்ட பிரமமேதானாகக்கண்டிருக்கிற நமக் கொருசமுசாரத்தொடர்புங் காரணமில்லாமற் சுத்த சைதன்னியமாயிருக்கையால் நாமேயசம் சாரியென்றறிக. (சகூ)

அபெத்தன்.

தன்மாதன்மபாசத்தாலுஞ் சந்தேகங்கருணைப யம்நாணமருவருப்புக்குரோதம் லோபமோகம தமாச்சரியமபிமானஞ் சுகந்துக்கஞ்சிரத்தைய த்திவித்தை முதலானவெல்லாப்பாச மென்று சொல்லப்படும்- இருடினைவினைக்கயிற்றுக்கட்டு மாப்போலப்பிரமம் நாமென்கிற புத்தியைம றைத்துத்திருடின வக்கியானம்வந்தவுடனேதே காபிமானமுறைத்துத்தேகமேதானென்று அபி மானித்தசீவனாகியதிருடனித்தனைபாசங்களாலு ங்கட்டுப்படுவன்அப்போதவனுக்குச்சுகதுக்கமு ம்பயமுமனேகசனனமுமுண்டு- உபாசித்தவீ சுவரகருணையால் வேதப்பிரமாண சித்தமாகவி ருக்கிற பிரமக்கியானமுறைத்துத்தேகாபிமான ம் போனபின்தன்ன பிமானியாகவிருக்கிற கிரக ஸ்தனுக்குச்சன்னியாசம் பண்ணத்தன்னபிமா னம் போன பின்தன்னிமித்தியமாகவிருந்தபய ந்துக்கம் விட்டுப்போனாற்போல அவனுக்குப் பாசபந்தத்துக்க வுபாதிகளெல்லாம் விட்டுப் போனபடியாலுஞ் சரீரவிந்திரியங்களாலும் ப ஞ்சபூதப்பிரபஞ்சங்களாலுங்கட்டுக்கட்டப்பட

மலகண்டானந்த வடிவாகவிருக்கிறநமக் கொரு
பந்தமுமில்லாதபடியானுமேயபெத்தனென்ற
றிக. (௫௰)

நிரவயவன்.

கரசரணாதியவயவமுடைத்தாயிருக்கிற சரீரத்தி
ரயங்கட்கன்னியமாயாகாய வடிவாயவத்தாத்திர
யசாட்சியாயிருக்கிறநமக்குத்தனக் கென்றோர
வயவங்களுமில்லாதபடியாலுந்தன்னைப் போற்
சத்தாகவு மிராமற்றன்னவயவமென்று நிருபிக்
கும்பொருளுமாகாமற்றன்னிடத்திற்கற் பிதமா
னபிரபஞ்சத்தைப் பற்றியுமவயவமில்லாதபடி
யாலுமிப்படி இருவகையவயவமுமற்றுத்தானே
தானாகவிருக்கிறநாம்நிரவயவனென்றறிக. (௫௧)

அபரோட்சன்.

கன்மகாண்டத்தாற் சொல்லப்படுகிற தன்மாத
ன்மங்களுமதின் பலன்களுமுடனே காணாதப
டியாலும் பத்திகாண்டத்திற் சொன்னதேவதை
களுஞ்சாத்திரப் பிரமாணமாய்க் காணப்பட்ட
தேவதைகளும் பரோட்சமென்று சொல்லப்ப
டும்-ஞானசாத்திரத்தாற்சொல்லப்பட்டபிரமம
ப்படிபரோட்சமாய்த் தோற்றுமனு பதேசித்த
வுடனேதானாகத்தோற்றுகிற படியாலு மப்படி
தானேயெக்காலத்திலுந்தானாகவிருக்கிற நாமே
யபரோட்சனென்றறிக. (௫௨)

சுவயன்.

அஞ்ஞானகாலத்திற்றானாகத்தோற்றின தத்துவ



மிருபத்தெட்டுந்தனக்கன்னியமாகத்தோற்றின
தத்துவமேழும் சகமுப்பத்தைத் துதத்துவத்தி
ற்குமப்பாற்பட்டிருக்கிற முப்பத்தாறுதத்து
வமெப்போதுந்தானாக விளங்குகையானுமேசு
வயனென்றறிக. (௫௩)

அஹேயன்.

ஒருவேதத்திலிதுவும் பிரமமல்ல விதுவும்பிர
மமல்லவென்றிந்தவிருசொல்லாலும்பிரமத்தை
யுபதேசிக்குது - மற்றொருவேதத்தி லான்மா
விதுவுமல்ல விதுவுமல்ல வென்றிந்தவிருவில
க்காலுமுபதேசிக்குது-இதற்குளாளப்படியென்
னில்- மற்றொருவேதத்தில்மிர்தம் மிர்தமென்
றுபிரமத்திற்கிரண்டுரூபமுண்டு இதையறிந்து
தள்ளிக்காணவேண்டுமென்றுசொல்லுது இந்த
விருவகைநிஷேதமும் அந்தவிருவகை மிர்தத்
தையுந்தள்ளச்சொன்னதாகவேண்டுமிதற்கு மிர்
தமென்பதுமூன்றுபூதமும் அமிர்தமென்பதிர
ண்டுபூதமாகவும்அல்லது நாலுபூதமைந்துமிர்த
மென்றும் சூட்சும பூதமைந்துமமிர்த மென்
றுமிந்தவிருவகையு மல்லதிவையெல்லாமிர்த
மென்றும் பிரமமாத்திரமமிர்த மென்றுமுரை
கொள்ளலாமெனன்னில்இந்தமூவகையின்முந்தி
னவுமாயாற்சூட்சும பூதந்தள்ளுபடாமல்மிஞ்சு
மிரண்டாமுரையாலிந்தவிருவகை நிஷேதத்தா
ற்பிரமம்வெளியாகாது-வேறே பொருளாக்கிய
ம்வந்ததிதுபிரமமென்றுகாட்டவேண்டிமூன்

றுமுறையாற்பிரமமுங்கூடத்தள்ளுபட்டுப்போ
மிப்படி இந்தவிருவகைச்சொல்லும் பிரபஞ்ச
த்தையும்பிரமத்தையுந்தள்ளுமோ அல்லதுவொ
ருவனையுபசாரமாகவாருமொரு மென்றிரண்டு
ரமாகவாவரித்தழைக்கிறசொற்போல விருவகை
நிஷேதவார்த்தையு மொருவனையொரு நிஷே
தத்தைத்தானேயோவிப்படியானலொரு நிஷே
தமாய் மிர்தமென்னப்பட்டஸ்தூல சூட்சுமப்
பிரபஞ்சத்தைத்தள்ளிப் பிரமத்தை மிஞ்சவை
த்ததோவென்கிற விசாரத்தில்சகஞ்சத்திய மெ
ன்கிறவாதிகள் வாக்கிற்குமனதிற்கு மெட்டாத
துபிரமமென்று வேதஞ் சொன்னபடியாற் கா
ணப்படாதபிரமமேதள்ளயோக்கியம் பிரத்திய
ட்சமாயிருக்கிற பிரபஞ்சத்தைத் தள்ளுகிறது
-யோக்கியமல்லவென்பார்கள் - சூன்யவாதிக
ளிருவகைநிஷேதத்திற்கு மிருவார்த்தை யாகத்
தானேபிரமத்தையும் பிரபஞ்சத்தையுந் தள்ளி
விடுவார்கள்- வேதாந்திகளிருவகையுந் தள்ளிவி
ட்டால்மிஞ்சப்போகிற தில்லாதபடியா லிருவ
கை நிஷேதமாயிரண்டுவகையுந் தள்ளக் கூடா
தொருவகை யாகத்தானே இருநிஷேதத்திற்கு
முறைமைகொண்டொருபொருளைத்தானே நிஷே
திக்கவேண்டுமென்பார்கள் அஃதாவது-தூலசூ
ட்சுமப் பிரபஞ்சமென்னப்பட்ட பிரமத்தினு
டையமிர்தவடிவையுஞ் சச்சிதானந்த வடிவாயி
ருக்கிறவமிர்தவடிவையுஞ்சுருதியுத்தி யனுபவ



த்தாலிது பரமார்த்தமிது அபரமார்த்த மென்
றுசோதித்துப்பார்த்துக்கொண்டுஇதுபாம்பல்
லவிதுபாம்பல்ல வென்கிறவிரண்டு நிஷேதமு
ங்கூட்டியொருவாயாய்ப் பாம்பைமாத்திரந்தள்
ளிப்பழுதையைமிஞ்சவைத்தாற்போல இங்கு
ம் அநிர்வசனமாய்ப்பரமார்த்தமாய்ஹேயமாயி
ருக்கிறபிரபஞ்சபதார்த்தப் பொருளேநேதிநே
தியென்று விஷயமாயிருக்கிற பிரபஞ்சத்தைத்த
ள்ளுகிறதேயுவாயாகக் கொண்டால் விஷயியாய்
க்காண்கிறதானேபரமார்த்தவடிவாய்பிரத்தியே
கவான்மாவாயிருக்கிறதானேயஹேய னென்று
மிஞ்சக்காணலாமாதலாலுமேயஹேய னென்ற
(௫௪)
றிக.

அனுபாதேயன்.

கன்மகாண்டத்திற் சுவர்க்காதி சுகத்தைவிரும்பி
யதற்குச் சாதனமானநித்திய நைமித்தியங்காமி
யப் பிராயச்சித்தமென்னப்பட்ட நால்வகைக்க
ன்மத்தையுஞ்சாங்கமாகவனுஷ்டித்தவனுக்கந்த
ச்சுவர்க்கபலமேயாகமகப்படும்-பத்திகாண்டத்தி
ல்மோட்சார்த்தமாய்சிவன் விஷ்ணு தேவிமுத
லானதேவதைகளைத் தீட்சாசுத்திமந்திர எந்திர
தந்திரங்களையுமுபதேசம்பெற்று அந்தப்படிக்
குச்சிவத்தியானம் பூசைதோத்திரம்தர்ப்பணம்
பிராமணபோசன முதலானசாதனங்களைச் சாங்
கமாகவெனுகால மனுஷ்டித்தவனுக்கு அந்தப்
பொருளா யிருக்கிறதேவதையைச் சாட்சாத்கா

ரமாகவடைர்து நாலுவகையாகவிருக்கிற அனித்
தியமுத்திகளிலொன்றையடைவன் இப்படி இர
ண்டுசாத்திரத்திற்குமுபதேசமாயடையும்பொ
ருளுண்டுநித்திய முத்தியானமோட்சத்தைவிரு
ம்பிச்சாதனசதுட்டயமுள்ளவனும்வேதாந்தசா
த்திரங்களில்மோட்ச சாதனமாகச் சொல்லுகிற
சிரவணமனன நிதித்தியாசனசமாதி சாட்சாத்
காரமென்கிற மோட்சசாதனவனுட்டானங் க
ளைச்சாவதானமாகநெடுங் காலமனுஷ்டித்து வ
ந்தவனுக்குப்பிரதிபந்த நிவிர்த்தியானவுடனே
விரும்பித்தேடினமோட்சபதமந்தச்சாத்திரப
லம்போலவகப்படும் பொருளாகக்காணுமலொ
க்கவேயிருந்தவனுகச்சித்தித்தபடியாமலப்போ
தூஞ் சச்சிதானந்தமாயவத்தாத்திரய சாட்சியா
ய்த்தவருமையிருக்கிறதாமேயனுபாதேய னென்
றறிக. (௫௫)

அப்பிரவிர்த்தன்.

கப்பலோட்டுகிறவன் கண்ணுக்குக்கரையின்மர
ங்களோடுகிறாப்போலத் தோற்றினாலும் அது
களோடவில்லை நிலைபெற்றிருக்கிறதென்றுமன
திற்காண்கிறாப்போலவுங்கப்பலிலே தான்படுத்
திருக்கிறதாய்க் கண்ணுக்குத் தோற்றினாலுந்தி
வாந்தரத்தைக்குறித்தோடுகிறதொழிற் பட்டவ
னுகமனதிற் காண்கிறாப்போலவும்இகலோகபர
லோகத்தைக்குறித் திருபத்தெட்டுதத்துவத்தி
னுடனுமாங்காரங்கூடிப்பவுதிகத் தொழிற்பட்



டாலுமான்மதிருஷ்டியிற்றனக்கொருதொழிலு
மில்லையென்று மகங்காரமொழிந்திருந்தாலுமா
ன்மதிருஷ்டியிலகங்கார நிவிர்த்தித் தொழிலாயி
ருக்குதென்று மிப்படியகங்காரத்தின் கண்ணு
ய்த்தோற்றினபிரவிர்த்தித்தொழிற்களைப்பற்றி
யான்மதிருஷ்டியிலொருபிரவிர்த்தித்தொழிற்க
ளுந்தனக்கில்லை எப்போதுமிந்தவிருவகைக்கு
ஞ் சாட்சியாய்த்தொடர்பற்றுச்சின் மாத்திரமா
யிருக்கிறதாமே அப்பிரவிர்த்தனென்றறிக. ()

சீவன்.

ஒன்றுவந்தாலொன்று காணுமன் மாயையாய்ப்
பறந்துபோகிறவவத்தாத்திரயபிரபஞ்ச மூன்றி
ற்குஞ்சாட்சியாய்நாலாம்பொருளாயத்துவைத்
சின்மாத்திரமாயிருக்கிறதாமேசீவனென்றறிக.(

அமிர்தன்.

அமிர்தமென்னப்பட்டயோகாமிர்தந்தேவாமி
ர்தமுதலானவமிர்தங்களைப்பானம் பண்ணிநம
க்கு மரணமில்லை என்றிருக்கிறபேர் களுமோ
ரொருக்காலீசுவரப் பிரளயத்திலே நசிக்கக்கண்
டாப்போல அனந்தானந்த சின்மாத்திரமே நா
மென்றும்மோட்சவமிர்தத்தையடைந்தவனொரு
க்காலும்நசியாதபடியாலுமமிர்தனென்றறிக.(

நிருபன்.

பஞ்சபூத பவுதிகங்கட்குமுருவமுண்டு இவைக
ட்கப்பாற்பட்டிருந்தவைகளையறிகின்ற சட்சித்

திரியமரூபமென்பர் - சிலரிதற்கப்பாற் பட்டி
ருந்தித் திரியங்களையியக்குமனமரூப மென்ப
ர்- சிலரி தற்கப்பாற் பட்டிருந் தசஞ் சலமுத
லானமனோவியாபாரங்களையறிகிற புத்தியரூப
மென்பர் - சிலரிதற்கப்பாற் பட்டிருந்திதனு
டையகர்த்ருத்வ போக்த்ருத்வங் களையறிகிறவி
சிஷ்டனையரூபமென்பர்- சிலரிதற்கப்பாற்பட்
டிருந்தவிசிஷ்டனையு முண்டாக்கியாட்டிவித்த
டக்கிக்கொண்டு வாசனைமாத்திரமாக விருக்கிற
மூலப்பிரகிருதியையரூபமென்பர் - சிலரிதற்
கப்பாற்பட்டிவைகளுடைய விரிவொடுக்கமுத
லானவைகட்குச் சாட்சிமாத்திரமாக விருக்கிறந
ம்மை மற்றொன்றிலுங்காணப்படாதபடியா
னமேதிரூபனென்றறிக. (௫௯)

சாந்தன்.

கட்டையிற்பிறந்தநெருப்பு கட்டையெல்லாஞ்சு
ட்டுத்தானுஞ்சாந்தமாய்ப் போகிறாப் போலப்
பிரகிருதிபுருஷ சையோகத்தாலுஞ் சாத்திரத்
தாலும்பிறந்தவகண்டாகாரவிருத்திஞானம் பிர
மத்திற்கன்னியமாயிருக்கிறபிரகிருதி புருஷசா
த்திர முதலானவைகளையற்பமு மிஞ்சாமற்சுட்
டுத்தானுஞ் சாட்சியாகவிருக்கிற நம்மிடத்தினை
சித்தபடியா னிஷ்ப்பிரபஞ்சனாக விருக்கிறநா
மேசாந்தனென்றறிக. (௬௰)

அபயன்.

ஒன்றுக்கொன்றுபயப்படுகிற மிருகம் பட்சிம



னுஷர்இராசர்இருஷிகள் தேவர்கள் கந்திருவர்
இராக்கதர்உலோகபாலர்நான் முகன்விஷ்ணுமு
தலானபேர்களா லுமகண்ட சின்மாத்திரமாகவி
ருக்கிறநம்மை வெட்ட வறுக்கப் பொசுக்கநனை
க்கப்பிடிக்கவடைக்கப்படாதபடியா லொருப
யமுமற்றிருக்கிறநாமேயபயனென்றறிக.(௬௧)

நித்தியானந்தன்.

விடங்கலந்ததேன்போ லொருகிராமமு சீர்மை
இராச்சியமாளுகிறபேருடைய வானந்தமும்வி
யாதிமனைப்பீடைய கலகர்சோரர் நெருப்பும
ழைஇடிமுதலான துக்கங்கலந் திருக்கிறபடியா
லிவையெல்லாமொருவானந்தமென்னக்கூடாது
சக்கிரவாளகிரிக ளுட்பட்ட விராச்சியமெல்லா
மொருகுடைக்கீழாளுகிறவனாய் நூறுவயசு மா
ரோக்கியதிடகாத் திரமாகியவீரனாய் சகலனாயு
ஞ்செயிக்கப்பலமுடையவனாய் சகலவேத சாத்
திரமும்வந்தவனாய்சகல செனங்களாலும் வாழ்
த்தப்பட்டவனாயிருக்கிறவனுக் கொருமனுஷா
னந்தமுண்டு இந் நூறுகொண்ட தொருமனுஷ
கந்தருவானந்த மப்படியொன்றுக் கொன்று
நூறுமடங்கானந்தம் பெற்றிருக்கிற தேவர்கந்
திருவர்பிதிர்த்தேவர் அஜானதேவர் உலகபாலர்
தேவேந்திரன்பிரசாபதி நான்முகன் விஷ்ணுமு
தலானபேர்களுடைய வானந்தமெல்லாங்கால
ந்தரத்திலே யனித்தியானந்தமாக வழிந்துபோ
கக்கண்டபடியாலு மித்தனையு மாயாமயமான

பொய்யென்று தள்ளிக்கக்கின வன்னம்போல் கக்கிப்போட்டொருக்காலுமாருத வகண்டான ந்தவடிவாயிருக்கிறநாமே நித்தியானந்தனென் றறிக. (௬௰௨)

## நிர்விஷியன்.

நாமரூபாத்மகமானசகலப் பிரபஞ்சமும் அத்தியாதிப்பிரியமாகிறபிரமரூபமாய்ச் சத்தாகாரமாகத்தோற்றுகையாற்பிரமத்திற்குவிஷியமாவதற்கும்வேறுசத்தில்லாமையாலும் புத்தியாதிகட்குவந்தசுகதுக்கமவிவேகத்தாற் றனக்குவந்ததாகத்தோற்றுகிறதை விவேகம்வந்து விசாரித்துப்பார்த்தபின்னரந்தசுகதுக்கமின்னவிடமென்றுகாணுமல்ஒருக்காலுநமக்கில்லை என்றுபோனதுபோல்சகலப் பிரபஞ்சமுஞ் சத்தாகக்கண்டவுடனெப்போதுஞ்சகலமுஞ் சத்தேயொழியவொருக்காலும்பிரபஞ்சம்வந்ததுமில்லைபோனதுமில்லையொருக்காலும்விஷியப்பற்று ஆன்மாவிற்கில்லையென்றுபோனதாலும்நாம்நிர்விஷியனென்றறிக. (௬௰௩)

## புராணன்.

நாறுவருடத்திலுத்பத்தி லயமாகிற தூலசரீரத்திற்குமுன்னுஞ் சிருட்டிகளிலுண்டாய்ப் பிரளயத்திலயமாகிறசூட்சும சரீரத்திற்கு முன்னும் ஞானம்வந்தவுடன்லயமாகிற காரண சரீரத்திற்குமுன்னும்நாமிருக்கையாலுமேபுராண னென் றறிக. (௬௰௪)



## புராதனன்.

சமட்டிஸ்தூலசரீரமொருபுரமாகவுஞ் சமஷ்டிசூட்சுமசரீர மொருபுரமாகவுஞ் சமஷ்டிகாரணசரீரமொருபுரமாகவு மிந்தமூப் புரத்திலும் நாம்வியாபியாயிருந்துவிளையாடுகையாலுமே புராதனனென்றறிக. (௬௰௫)

## சூனியன்.

சர்வமுஞ்சடஞ்சித்திரண்டாயிருக்கிறசகலமெல்லாஞ்சத்தில்லாமலெப்போதுமசத்தானபடியாலும்சித்துலட்சணம் லட்சியத்தி லில்லாமையாலும்லட்சியமும்லட்சணத்தி லில்லாமையாலுமப்பாலொருவஸ்துவு மில்லாமையாலுமே சூனியனென்றறிக. (௬௰௬)

## மகாசூனியன்.

மேற்சொல்லிய சூனியமுமதிற் சூ மகாசூனியமென்று பாவமாயறிகையால் ஞானஞ்ஞானுபவமனுபவத்திற் சூனியமுமதையறியு ஞானமும்போய்வேறொன்று மில்லாதபடியாலும்மகாசூனியனென்றறிக. (௬௰௭)

## திவிர்த்தன்.

பஞ்சபூதப்பிரபஞ்சவிஷியம்நாமல்லவென்று நீங்கினபடியாலுந் தூலசரீர நாமல்லவென்று நீங்கினபடியாலுஞ் சூட்சுமசரீர நாமல்லவென்று நீங்கினபடியாலுங்காரணசரீரம் நாமல்லவென்றுநீங்கினபடியாலும்விசிஷ்டி வீசுவரநாமல்

லைவென்று நீங்கின படியாலும் நாமே நிவிர்த்த னென்றறிக. (௬௮)

அகாமன்.

மயிர் நகந் தோல் சதை நீர் இரத்தஞ் சீழ் கோழை நிணம் மலம் பீளை குறும்பி சுக்கிலம் வழும்பு எலும்பு அழுக்கு வேர்வை இவை முதலானதைக் கேட்கிலும் அருவருப்பு, தொடுகிலுங் குளிக்கவேண்டியபடியாலும் அருவருப்பு, காண்கிலும் அருவருப்பு போசிக்கில் வாந்தி வருதலாலும் அருவருப்பு, முகர்தாலும் நாற்றம் பொருந்தாத படியாலும் அருவருப்பு இதுகளெல்லா முடைத்தான தேகத்தைக் கூடில் வியாதி முதலான பீடை வருகையால் இந்தத் தோஷமெல்லாம் நிந்திதையிச்சியாத படியாலுமே அகாமனென்றறிக. (௬௯)

அலோபன்.

ஞானி தனக்குள்ள துன்னையுந் தன்னையடைந்தவர்களுக்குக் கொடுக்கையாலும் அலோபனென்றறிக. (௭௰)

உன்னதன்.

சிதாபாசனிலு முன்னதனீசுவரனிவனிலு முன்னதன் பிரபஞ்சப் பிரமமே நாமானபடியாலும் நம்மிலும் வேறுன்னதமில்லாமையாலுமேயுன்னதனென்றறிக. (௭௧)

அக்குரோதன்.

கன்மத்தினிடமாயுங் கன்மத்தை நடப்பிக்கிற கர்த்தாவினிடமாயுந் துக்கம் வந்தாலும் பஞ்சபூதங்



களினிடமாய்த் துக்கம் வந்தாலுஞ் சரீர பீடை பந்துக்கள் பீடை செனங்கள் பீடை இராச பீடை கள்ளர் பீடை பசு பட்சி மிருக செந்துக்கள் பீடை நேர்ந்த விடத்தின் மனதிற் றுக்கமிலிருக்கையாலும் அக்குரோதனென்றறிக. (௭௨)

சமாதியுக்தி - நித்தியன்.

எல்லாத தேசத்திலு மெல்லாக் காலத்திலு மாகாச மொருபடித் தாயிருக்கிறபடிபோல் சுத்தபரியந்தமுள்ளவகிலப் பிரபஞ்சங்களிற் பஞ்சகோச முள்ளவிடமெல்லாம் பஞ்சகோசத்தைக் காண்கிறவனாகவே நாமொருபடித்தாயிருக்கையாலுசமில்லாத நாமே நித்தியனென்றறிக. (௭௩)

சர்வகெதன்.

சாட்சியிலேகதேசகற் பிதமாயிருக்கிறது மாயையிதிலேகதேசகற்பிதமாயிருக்கிறது மாயாப்பிரதிபிம்பர் இதிலேகதேச கற்பிதமாயிருக்கிறதிரணியகற்பம் இதிலேக தேசகற்பிதமா யிருக்கிறது விராட்டு இதிலேக தேசகற் பிதமாயிருக்கிறது பஞ்ச பூதங்களிதிலேகதேசகற் பிதமாயிருக்கிறது லசங்களிதிலேகதேசகற் பிதமாயிருக்கிறது தேசங்களிதிலேகதேசகற் பிதமாயிருக்கிறது கிராமங்களிதிலேகதேசகற் பிதமாயிருக்கிறது வீடுகளிதிலேகதேசகற்பிதமாயிருக்கிறது சரீரங்களிதிலேகதேசகற்பிதமாயிருக்கிற இந்திரியங்களிப்படியொன்றேடொன்று சமமாகாத வகிலப்பிரபஞ்சங்களெல்லாவற்றையுங் காண்கி

றவதிவே வடிவாகவெங்குந்நிறைந் திருக்கையால்நாமேசர்வகதனென்றறிக. (௭௪)

சர்வாதாரன்.

அவித்தையா விசிஷ்டனுக்காதார மாயிருக்கிறது தூலசரீரமிப்படியனேகங்கோடிதூல சரீரங்கட்காதாரமாயிருக்கிறதுவிராட்டாதிப் பிரபஞ்சங்களிவைகட்கா தாரமாயிருக்கிறது மாயையுமாயாப்பிரதிபிம்பரும்இவருக்காதார மாய்சச்சிதானந்தமாயிருக்கிறநம்மிடத்திலிவைகளெல்லாமேகதேசகற்பிதமானபடியானுமேசர்வாதாரனென்றறிக. (௭௫)

நிராதாரன்.

மூன்ஆகமத்திற்சொல்லியவீசுவரபரியந்தத்திற்குமாதார மாயிருக்கிற நமக்குவேறோராதாரமில்லாமையாலும்நாமேநமக் காதாரமாகையாலும்நாமேநிராதாரனென்றறிக. (௭௬)

ஆதி.

சரீரங்கட்காதியாயிருக்கிறது பூதங்களிதற் காதியாயிருக்கிறதுவிட்சேபசத்திஇதற்காதியாயிருக்கிறதுமாயையவித்தைஇவைகட்கெல்லாமாதிவஸ்துவாயிருக்கிறதுசைதன்னியமான படியாலுமொருசூட்சும சரீரமிருக்கிறகாலத்திலாதியந்தமுடைத்தாய் போக்குவரவுடைத்தாயிருக்கிறவனேகக்கோடிஸ்தூலசரீரங்களொருகாரண சரீரமிருக்கிறகாலத்திற்குள்ளே சிருட்டிகாலத்தோறுமுண்டாய்ப் பிரளயகாலத்தோறும் நசித்து



ப்போகிறவனேகங்கோடிசூட்சும சரீரங்களவித்தையாவிசிஷ்டனுக்குற்பத்தியில்லாதபடியாலநாதி என்று சிந்தித்துச்சீவன் முத்திவந்தவுடனேகாரணமற்போகிறபடியாலுமந்த மூடைத்தாயிருக்கிறவிசிஷ்டனுக்கன்னிய மாயித்தனைக்கும்முதற்பொருளாயிருக்கிறபடியாலு நாமேயாதியென்றறிக. (௭௭)

அநாதி.

மூன்றாமத்திற்சொல்லியபடி சகலத்திற்குமாதிவஸ்துவாயிருக்கிற நமக்கு மற்றொருவஸ்துவில்லாதபடியாலுமநாதி என்கிறகன்மம் அஞ்ஞானம்பிராந்திபேதஞ் சிவனீசுவர னென்னப்பட்டசோபாதிகசைதன்னியசத்தும் நிருபாதிகசைதன்னியமாயிருக்கிறபிரமமும் ஆகயாறுவஸ்துவிற்குள்ளாகக்கற்பிதவநாதியாயிருக்கப்பட்டவைந்திற் கதிஷ்டான சைதன்னியத்திற்காதியில்லாதபடியாலுமந்தச்சைதன்னியமாயிருக்கிறநாமேயநாதியென்றறிக. (௭௮)

விபு.

அவித்தையாவிசிஷ்டனைச் சூழ்ந்தளவிடப்பட்டதுசூட்சுமசரீரமிதனைச்சூழ்ந்தளவிடப்பட்டது தூலசரீரமிப்படியனேகங்கோடி ஸ்தூலசரீரங்களாலளவிடப்படாதது பிருதிவிஇதனாலளவிடப்படாததுஅப்பு இதனாலளவிடப் படாத

து அக்கினி இதனாலளவிடப்படாதது வாயுஇதனாலளவிடப்படாதது ஆகாசம் இவைகட்கும்விரிவாயிருக்கிறது அவ்வியாகிருதம் இதற்கும்விரிவாயிருக்கிறது அவ்வியக்தம் இதற்கும்விரிவாயிருக்கிறது சுத்தம் இத்தனைகளாலுமளவிடப்படாமல் விரிந்திவைகளையெல்லாஞ் சூழ்ந்திருக்கிறவர்மாயாவிசிஷ்டர் இவராலுமளவிடப் படாமலனந்தமாய்விரிந்து சச்சிதானந்தமாயிருக்கிறநம்மிலும்மற்றொன்றுபெரிதாய் நம்மையளவிடுகிறதொன்றுமில்லாதபடியானுமே விபுவென்றறிக. (எக)

மகத்து.

அதமசரீரங்களாகிய தாபரங்கட்கு மகத்துவமுடையது ஞானத்தாலதிசயித்திருக்கிற சலசரிகேசரிதிரியக்குசந்து முதலானமத்திம சரீரங்கள் அவைகட்குமகத்துவமுடைய சண்டாளர் துலுக்கர் முதலானவர்கள் அவர்கட்கு மகத்துவமுடைய சங்கரசாதிகள் அவர்கட்கு மகத்துவமுடையசூத்திரர் அவர்கட்குமகத்துவ முடைய வைசியர் அவர்கட்குமகத்துவமுடைய க்ஷத்திரியர் அவர்கட்கு மகத்துவமுடைய பிராமணர், அவர்கட்குமகத்துவமுடையபிராமணருக்குமொன்றுக்கொன்றதிகமான நாலாசிரமங்கட்குச் சிரேஷ்டமாயிருக்கிறசன்னியாசிகள் அவர்களிலாயிரத்திலொருவர் மகத்துவமுடைய தீட்சா தீட்சிதர் அவர்களிலாயிரத்திலொருவர் மகத்துவமு



டையவுபாசகர் அவர்களிலாயிரத்தி லொருவர் மகத்துவ முடையவிருடிகள் அவர்களாலுபாசிக்கமகத்துவமுடையபிதிர்த் தேவர் அவர்களைச் சேவகங்கொண்டுஅவர்களாலுபாசிக்க மகத்துவமுடைய விந்திராதிலோகபாலர் அவர்களாலுபாசிக்கமகத்துவமுடையபூதாதிபதிகள்-

அவர்கள் பரியந்தமாகச்சொல்லப்பட்டவெல்லாராலும் பூசிக்கமகத்துவ முடையமகேந்திரர் வைசுவானரர் முதலானயோகிகள் இப்படிப்பட்டயோகிகளிலு மொருத்தரி லொருத்தரதிசயித்தமகத்துவ முடையபுருடர் அவர்களாற் பூசிக்கமகத்துவ முடையகுமாரர் இந்தக் குமாரர்சங்கேதத்திற் குச்சரியாய்ச் சொல்லப்பட்டவெல்லாராலுமிஞ்சி நடுங்கிப்பூசிக்கமகத்துவ முடையதேவிதேவர் இவர்களிரண்டுபேருக்கும் பிராணபதமாய்வாஞ்சித்துப்பத்திபண்ண மகத்துவ முடையசச்சிதானந்தமாயிருக்கிற நமக்குச்சரியானவத்துவுமதிகமானவத்துவு மில்லாமலெல்லாவற்றினும் நாமதிசயித்தபடியானுமேமகத்தென்றறிக. (அய)

நிரஞ்சனன்.

தன்சரீரின்மூழ்கினவன்பேரிற்சலம் பற்றினாற்போலப்பற்றாமற் சகலப்பிரபஞ்சத்தினுமுள்ளும்புறம்பும் நிறைந்திருக்கிற நம்மிடத்திலமிழ்ந்திருக்கிறவவத்தாத்திரயத்திலுங் காணப்பட்டகத்தபரியந்தப் பிரபஞ்சங்களுடனே பற்ற

ற்றாகாசம்போலத்தொடர்ச்சியற்றிருக்கிறநாம் நிரஞ்சனனென்றறிக. (௮௧)

காரணன்.

மூவகை சரீரங்கட்குக்காரணமானது கன்மங்கள் பூதங்களிவைகட்குங் காரணமானது சூட்சுமபவுதிகங்களிவைகட்குக்காரணமானவன் அவித்தையாவிசிஷ்டன்மாயா விசிஷ்டனிவர்கட்குச்சகத்தசைதன்னியமான நாமேகாரணமானபடியாலுங்காரணரூபமானசச்சிதானந்த லட்சணப்பிரபஞ்சத்திற்குவேறு ரூபமில்லாமையாலுங்காரணரூபமான நம்முடைய ரூபமேகாரியரூபமானசகத்திற்கு ஸ்வரூபமானபடியாலும் நாமேகாரணனென்றறிக. (௮௨)

அகாரணன்.

மேற்சொல்லியபடிக்குச்சகலத்திற்குங் காரணமாயிருக்கிறநமக்குவேறொருகாரணமில்லாமையாலுஞ்சச்சிதானந்தமாயிருக்கிற நாமேசகலத்திற்கு மூலவஸ்துவானபடியாலும் நாமேயகாரணனென்றறிக. (௮௩)

சாட்சி.

சகலப் பிரபஞ்சவியாபாரத்திற்கு மாதித்தன்சன்னிதானமேகாரணமாயிருக்கிறதுபோல அகிலவிந்திரியவியாபாரப் பிரபஞ்சங்கட்குஞ்சைதன்னியத்தினுடைய சன்னிதானத்தாற் சகலவிவகாரங்களும் நடக்கிறதாகவிருந்தாலுஞ் சாட்சியாகிறதந்நாமாகவும் பிரவிர்த்தி நிவிர்த்தி



னைப்பண்ணுமெலொன்றைக்கொண்டும் பண்ணிவையாமலிவைகட்கெல்லாம் மத்தியஸ்தனைப்பார்த்துக்கொண்டுசூரியனைப்போற் சகலவியாபாரத்தையுந்தோற்றுவிக்கிறமாத்திரமாகவிருக்கிறபடியாலுந்தான்யாதொருசாதனமன்றியில்தன்னாலேதானே சகலத்தையும் பார்க்கிறபடியாலுநாமேசாட்சியென்றறிக. (௮௪)

ஸ்தாணு.

மனதிந்திரியங்கள்சஞ்சலமாகவிலத் தோடுகிறது
* மசையாமலிருக்கிறதுதூலசரீரமிப்படியநேகங்கோடி தூலசரீரங்களோடித்திரியினுமசையாமலிருக்கிறது பூதங்கள் பூதங்களைசந்தருகினுமசையாமலிருக்கினுமோடுகிறதுப்போலக்காண்பிக்கிற நட்சத்திரஞ்சூரியாதி மண்டலங்களிப்படிபசையாமலிருக்கிற மண்டலத்தினுஞ்சஞ்சரிக்கிற வைஸ்வானராதிகளிப்படிவெகுவிதமாகப் பின்னப்பட்டு வெகுசஞ்சாரபேதமுடைத்தாயிருக்கிறசுத்தபரியந்த முண்டாக்கியவகிலப் பிரபஞ்சங்களையுமொரு சரீரமாகநானென்ற பிமானித்துச்சைதன்னியத்திலேயடித்திரிகிறவீசுவரனிவனைவிட்டுப்புறம் பாகச்சைதன்னியத்திற் பிரதிசிருஷ்டிபண்ணியோடித்திரிகிறகுமாரர் முதலானபேர் களித்தனைக்குந்தானுகவிளங்கி இத்தனையலைச்சலோடு கூடியுமசையாமலித்தனையலைச் சலுக்குஞ் சாட்சியாகப்பார்த்திருக்கிறவகண்டாகார சைதன்னியனாகிறநா

மேஸ்தானுவென்றறிக. (௮௫)

பரிபூரணன்.

கடத்தைத்தண்ணீராற் பூரித்தாற் போலப்பிரா
ணமயகோசத்தாற் பூரிக்கப்பட்டிருக்கிற அன்
னமயகோசப் மனோமயகோசத்தாற் பூரிக்கப்ப
ட்டிருக்கிற பிராணமயகோசம் விஞ்ஞானமய
கோசத்தாற்பூரிக்கப்பட்டிருக்கிறமனோமயகோ
சமானந்தமயகோசத்தாற் பூரிக்கப் பட்டிருக்கி
ற விஞ்ஞானமயகோசஞ்சிதாயாசனுற் பூரிக்கப்
பட்டிருக்கிறவிந்தப்பஞ்சகோசங்களிதனாற் பூ
ரிக்கப்பட்டிருக்கிற பஞ்சபூதங்களிதனாற் பூரிக்.
கப்பட்டிருக்கிறபிரபஞ்சங்களிந்தப் பிரபஞ்ச
த்திலுமெங்கு நிறைந்திருக்கிறமாயா விசிஷ்ட
னும் நம்மாற் பூரிக்கப்பட்டுநம்மிலும் வேறாய
ர்பூரணமில்லாதபடியானுமேபரிபூரணனென்
றறிக. (௮௬)

அனந்தன்.

சரீரவிந்திரியங் களைப்பார்க்கிலும்வெகு தூர
மெட்டி விரிந்தத யிருக்கிற அந்தக்கரணங்கட
குமந்தமுடைத்தாயந்தக்கரணாதிகளாலு மெட்
டிக்காணப்படாததாய்விரிவான பஞ்ச பூதங்கட்
கும் மாயாவிசிஷ்டருக்குங்கால்பேதந் தேசபே
தங்களாலந்தங்காண்கிலுமந்தங் காணப்படாமற்
சாட்சியாகவிருக்கிறநாமனந்தனென்றறிக. ( )

சர்வகதன்.

[illegible]வோன்னதமாயிருக்கிற சத்தத்தின் மேலான



றுக்கொன்று பத்திலொன்றாய்க்குறைந்துசத்தி
யுங்குறைந்து தாரதன்மியமாயிருக்கிறமகத்து
முதலாய்க் கணிகையந்தமாயிருக்கிற லோகங்க
ள்தேவபாகம் மனுடபாகமென்றுதாரதன்மிய
மாயிருக்கிற பூதங்களுத்தமமத்திமமதமமென்
றுதாரதன்மியமாகக் காணப்பட்ட பிரமாதிஸ்
தம்ப பரியந்தமான சரீரங்கள் பாமரனகன்மி
யுபாசகன்யோகி ஞானியென்றவர்களிலேகதே
சமாகஸ்திரமுள்ளவனென்றங் காணப்பட்டசீ
வபேதங் கண்முதலீசுவராந் தமாய்த் தாரதன்
மியவத்துவான சகலபதார்த்தங் களிலுஞ் சத்
தாகாரமாய்த்தாரதன்மியமற் றெப்போதுமிரு
க்குஞ் சைதன்னியமாகிறநாமேசர்வசமனென்
றறிக. (௮௮)

சர்வாதிஷ்டானன்.

சூட்சும சரீரவிசிஷ்டனிவை முதலானவைகட்க
திஷ்டானமானஸ்தூல சரீரங்களு மிவைகட்கதி
ஷ்டானமான பூதங்களுமிவைகடகதிஷ்டானமா
னமாயா விசிஷ்டருங்கிளிஞ்சல் வெள்ளிப்போல
வாசாரம்ப மாத்திரமேயல்லாமலதிஷ்டானத்
தைத்தவிரவேறல்லவென்று நிச்சயிக்கப்பட்ட
படியாற்சைதன்னியமாகிற நாம் சர்வாதிஷ்டா
னமென்றறிக. (௮௯)

அகண்டன்.

இன்னகாலத்திலேயில்லையின்னகாலத்திலுண்டென்
றுமின்ன தேசத்திலுண்டின்ன தேசத்திலில்லை

யென்றுமின்னவத்திதாமின்னவத்திதல்லவென்
றமிப்படிமூன்றுவகையாலுங்கண்டிக்கப்படா
மற்றைதன்னியமாயிருக்கிறநாமேயகண்டனெ
ன்றறிக. (௧)

இன்னமொருயுக்தியுலகைமுக்கர்த்துடன்கூடி
அவைகளென்மனதினிச்சயித்தசித்தாந்தமெல்லாம
ருகன்புத்தன்முதலானவர்களின்மதங்களாற்க
ண்டிக்கப்படுமிவைகளும்தேவகர்த்திருவராகம
ங்களாற்கண்டிக்கப்படும்.
இந்தச்சித்தாந்தங்களெல்லாம்பிரமாகமங்களாற்
கண்டிக்கப்படும்இவைகளும்விஷ்ணுவிருகமங்
களாற்கண்டிக்கப்படுமிவைகளும்ருத்திராகமங்
களாற்கண்டிக்கப்படுமிந்தவைதிகவாகமங்களெ
ல்லாம்புராணத்தாற்கண்டிக்கப்படும்இதுவும்நீ
திசாஸ்திரத்தாற்கண்டிக்கப்படும் இதுவும்வேத
த்திற்சொன்னகர்மகாண்டத்தாற் கண்டிக்கப்ப
டும் இதுவுமுபாசனகாண்டத்தாற் கண்டிக்கப்ப
டும்இந்தவேசித்தாந்தசமுமுபநிஷித்து வேதாந்த
சித்தாந்தத்தாற்கண்டிக்கப்படுமிப்பேர்ப்பட்ட
வுபநிஷித்துக்களானிச்சயிக்கப்பட்டசச்சிதான
ந்தமாகியநம்மையேயொன்றாற்கண்டிக்கப்படா
மையாலுங் கண்டிக்க வேறுமொன்றுமுப நி
ஷித்துமநுசயித்த பிரமாணம் வேறொன்றுமி
ல்லாதபடியாலுஞ்சகலப் பிரமாணத்திற்குமுப
நிஷித் தொடுமுடியானபடியாலுநாமேயகண்
டனென்றறிக. (௰)



அபரிச்சின்னன்.

ஒருவனுக்கொருவன்பரிச் சின்னப்பட்டுவேறு
வேறாகத்தோற்றினவவித்தையா விசிஷ்டர் ஒன்
றுக்கொன்று பரிச்சின்ன மாயிருப்ப துதத்துவ
மாகத்தோற்றின சூட்சுமசரீரங்களிவைகளைக்கு
றித்துஅபரிச்சின்னமாய்த்தனக்குள்ளேயாறுதத்
துவமாய்ப்பரிச்சின்னப்பட்டுத்தோற்றின தூல
சரீரங்களிவைகளைக்குறித்து அபரிச்சின்னமாய்
த்தோற்றின பூதங்களிவைகளைக்குறித்து அபரிச்
சின்னமாய்த்தோற்றினமாயா விசிஷ்டருஞ்சாட்
சியாகிற நம்மைக்குறித்தும் பரிச்சின்னமானப
டியாலும் நம்மிலுமபரிச்சின்ன மொன்றுமில்
லாதபடியாலுமபரிச்சின்னனென்றறிக. ( )

அனுவிரதன்.

விசிஷ்டனையாவரித்தது சூட்சுமசரீர மிதனையா
வரித்தது தூலசரீர மிப்படிக்கொத்த தூலசரீ
ரங்களையும் பூதங்களையுமொன்றையொன்றுவரி
த்தது விராட்டாதிப் பிரபஞ்சங்களிவைகளையா
வரித்தமாயா விசிஷ்டராலுமாவரிக்கப் படாம
லவைகளையுமாவரித்தசாட்சியாகிறநாமனுவிரதனெ
ன்றறிக. (௰௨.)

சர்வகாரணன்.

மூன்றவத்தையிற் காணப்பட்டசகலப் பிரபஞ்
சமுஞ் சாட்சியிடத்திலுண்டாய்ச் சாட்சியிடத்
திலிருந்து சாட்சியிடத்திலழிந்து சாட்சிமாத்தி

ரம் நிறகிற்படியாற்சாட்சியாகிறநாமே சர்வகா
ரணமெனல்றறிக. (௬௩)

பிரமம்

காலத்திரயத்திலு மாகாயம்போல வொருபடித்
தாய்எங்கும் நிறைந்திருக்கிற நாம்நித்தியசுத்தா
திலட்சணங்களுடனே கூடினபடியாலுமேபிர
மமென்றறிக. (௬௪)

சாட்சாத்காரயுத்தி-யேகன்.

சொப்பனத்திற்கண்ட சிவனீசுவரன்சகம்பண்ணி
ன நன்மைதின்மை கேள்விப்பட்ட வேதாகம சாத்தி
ர புராணங்கண் முதலானவிகற்பமெல்லாஞ்சொ
ப்பனத்தைத் தோற்றுவித்தவறிவைத்தவிர வொ
ன்றுமில்லையென்கிறதுபோல அவத்தாத்திரயத்
திலுங்காணப்பட்டபிரபஞ்சமெல்லாங்காண்கிற
வறிவைத்தவிரவில்லாமலோரவத்தையிற் மேற்
றின பிரபஞ்சமந்தந்த அவத்தையைக் கண்டசா
ட்சிமாத்திரம் நிற்கவழிந்துபோன படியால்வே
றொன்றுகாலத்திரயத்திலும்வந்ததுமில்லை போ
னதுமில்லை என்கிற அனுபவத்தாலுமற்றொன்
றுமில்லையாகையினாலுமேயேகனென்றறிக... ()

சர்வான்மா.

சூரியனொருவனே பலவிதப்பிராணிகளுடைய
கண்ணிலும்பலவிதவுபாதிகளாற் பலவிதமாகத்
தோன்றினாலுமேகனாகவிருக்கிறானெப்படி வயல்
வாய்க்கால்குளம் வரப்புதேசங்கள் கிராமங்கள்
தெருக்கள்திண்ணைகள்மாடகூடங்கள் சட்டிபா



னைசுவர் கோபுரமுதலாய் பலவிதத்தோற்றரவா
னமண்ணிற் பேதமெல்லாந்தன்சுவரூபம் போ
லுண்டாயிருக்கிற லட்சணமாகவும் விளங்குகிற
லட்சணமாகவும் வாஞ்சிக்கப்படுகிற லட்சண
மாகவுமிம் மூன்றுலட்சணமாயிருக்கிற அகிலப்
பிரபஞ்சமுந் தன்னுடைய லட்சணமானசச்சி
தானந்த லட்சணமாகக்காணப் பட்டபடியாலு
ஞ்சச்சிதானந்த வடிவைவிட்டிருக்கிற பிரபஞ்
சவஸ்துசொற்பமுமில்லாதபடியாற் சகலப்பி
ரபஞ்சமாயிருக்கிற நாமேசர்வான்மாவென்று
றிக.

[மற்றுமொரு - யுத்தி.]

நாமென்கிறசத்தத்திற் கூன்று கோலாகச்சா
ட்சிவடிவமேநமக்குச் சித்தித்ததுபோல மிருக
ங்கள்பட்சிகள் மனிதர்கள் பிதிர்க்கள் தேவதை
கள்லோகபாலர்கள் பூதாதிகள் வைசுவானராதி
களென்னப்பட்டசகலமான அவித்தையா பிரதி
பிம்பருக்கும் மாயாப் பிரதி பிம்பருக்கும் நா
மென்கிற சத்தத்திற் கூன்றுகோலாகச் சாட்சி
யாயிருக்கிற நாமேயங்கங்குஞ் சித்திக்கையாலு
மேசர்வான்மாவென்றறிக. (௬௭)

சர்வாகாரன்

சொப்பனத்திற் காணப்பட்ட சகலப்பிரபஞ்ச
ங்களுந்தன்னுடையவாகாரமானதுபோல அவ
த்தாத்திரயப் பிரபஞ்சத்திற்கு நம்முடையசத்
தாகாரத்தைவிட்டுப்பார்த்தாற்பிரபஞ்சத்திற்கா

தாரமேயில்லாத படியாலும்நாமே சர்வாகார
னென்றறிக. (௧௭)

### அநேகரூபன்.

பாம்புவெள்ளியெனத் தோற்றினது பழுதைசி
ளிஞ்சி லல்லாமலொன் றுமில்லாதது போலச்சா
திவர்ணாசிரமபேதங் களதின்பலமான சுவர்க்கந
ரகாதிபேதங்கள் தேசபேதங் கிராமபேதங்கால
பேதஞ்சாஸ்திர பேதஞ்சீவேசுரபேதங்க ளெ
ன்னப்பட்ட முப்பத்தைந்துதத்துவங்களுஞ் ச
ச்சிதானந்தமாகியதன் வடிவானபடியாலும்வே
றொன்றினுடையசுவரூபமாகாதபடியாலுமொ
ருகூத்தாடியேபலவேடங் கொண்டாப்போலவு
மொருபூமியேபல விதவிகற்பமானாற் போலவு
மொருதண்ணீரே பலரசனைபல வண்ணமானாற்
போலவுஞ் சத்தாயிருக்கிற தானொருத்தனே சீ
வேசுவரப் பிரபஞ்சபேதமாயிருக்கையாலுமே
யனேகரூபனென்றறிக. (௧௮)

### ஏகரூபன்.

பலசட்டி தண்ணீரிற் சந்திரன் பலவிதமாகத்
தோற்றினுஞ் சந்திரனொருவனே யல்லாமலி
ரண்டில்லாததுபோலவுமவனவன் கண்ணுக்கு
த்தோற்றினசூரிய னொருவனேயல்லாம லிரண்
டில்லாததுபோலவும் பலவிதமாக அடிக்கிறகா
ற்றொன்றேயொழியவிரண் டில் லாததுபோல
வும் பலபெயராகச் சொல்லப்பட்ட பூமியொ
ன்றேயொழிய விரண்டில்லாததுபோலவும் ப



ளிங்குமண்டபத்திற் றானுக்குத் தான்றோற்றி
னதாமொருவனல்லாது இரண்டில்லாததுபோல
வுஞ் சொப்பனத்திற் பிரபஞ்சம் பலவிதமாகத்
தோற்றினும் புருடனொன்றல்லா திரண்டில்
லாததுபோலவுஞ் சீவ னீசுவரன் சகமென்றுப
லவிதமாகத்தோற்றினுஞ் சச்சிதானந்த லட்ச
ணமாகச்சகலத்தையுங் காணப்பட்ட படியாற்
பிரபஞ்சாகாரம் வெகுரூபமாகத்தோற்றினாலு
ம் பிரமமொன்றேயொழியவிரண்டில்லாமை
யாலுமேகரூபனென்றறிக. (௧௯)

### பரமார்த்தன்.

சகலப் பிரபஞ்சவியாபாரத்திற் குமாதித்தன்ச
ன்னிதானமே காரணமானாற் போலப் பாம்பு
வெள்ளிகானற் சலம்நயிலியவர்ணமென்று வழ
ங்கினபதார்த்தம் பரமார்த்தமாய்ப போய்நிரு
பித்துப்பார்க்கு மிடத்திலவைகளும் பழுதைசி
ளிஞ்சிலமுற் பூமியாகாசம் பரமார்த்தவடிவாய்
ச்சித்தித்தாற் போல- அபரமார்த்தஞ் சொப்ப
னமென்றுஞ் சாக்கிரம் பரமார்த்த மென்றுஞ்
சாக்கிரத்திலும்பரமார்த்தமின்றியேக மென்று
ந்தத்துவம்பரமார்த்தமென்று மிதிலயிசுவரிய
ப்மாடு வீடு பெண்பிள்ளையாளடிமை சரீரமுத
லானவிகலோகத்திற் போகபதார்த்தமெல்லாம்
நிலையற்றபடியாலபரமார்த்தமென்றுஞ் சொர்
க்காதிலோகப்பரமார்த்தமென்றுமிதிலேயுங்கன்
மபலன்கட்குநிலையற்று பிராவணன் சூரபத்மா

தாருகா சுரன்முதலானபேர்களாலழிக்கப்பட்
டபடியாற்சொர்க்காதிலோகங்கள் அபரமார்த்த
மென்றும்பிரமலோகம் பரமார்த்த மென்றுமி
ப்படிதாரதன் மியமாகவொன்றுக் கொன்றப
ரமார்த்தமென்றுகற் பிக்கப்பட்டிருக்கிற விரா
ட்டாதிப்பிரபஞ்சங்களுமதிலதிபதிகளுமாகக்க
ற்பித்திருக்கிற சிவேசுவரசகத்தெல்லார்திரவிசா
ரிக்குமிடத்தில்வாக்குமாத்திரமல்லாமற் பரமா
ர்த்தமல்லாதபடியாலு மிவைகளினுடைய தோ
ற்றமழிவு முதலானகாலங்களிலு மிவைகளுட
னே கூடவுந்தோற்றமற் கூடவுமழியாமலிவை
கட்கெல்லாம் புறம்புபட்டிருக்கிற் சச்சிதானந்
தமாகிறநாமே இவைகடோற்றுங் காலத்துமி
வைகட்குப்பரமார்த்தவடிவாகச் சித்திக்கையா
லுஞ்சச்சிதானந்தமாயிருக்கிற நமக்கழிவுந்து
மற்றொரு வஸ்துபரமார்த்தவடிவாகச் சித்தியா
தபடியாலும்நாமேபரமார்த்தனென்றறிக. (௩)

அத்துவைதன்.

லோகத்திலுள்ளமரஞ்செடிமுதலான தெல்லாம்
பூமியிலுண்டாய்ப் பூமியிலிருந்து பூமிமாத்
திரமாயழிந்து போகிறாப் போல அவத்தைக
டோறுங்காணப்பட்ட அகிலப்பிரபஞ்சங் களு
மறிகிற சாட்சிமாத்திரமாயிருக்கிற நம்மிடத்தி
லே யுண்டாய்நம்மிடத்திலே யிருந்து நம்மிடத்
திலே யழிந்துபோகிறபடியாலுஞ்சாட்சி சத
ன்னியமாயிருக்கிற தன்னைப்போலப் பின்னை



யொருவஸ்துவு மில்லாதபடியாலும் நாமேயத்
துவைதனென்றறிக. (௩௧)

வஸ்து.

வஸ்துவென்றதுபொருள் அதுவேபிரமமதுவல்
லாததெல்லாம்பொருளல்ல இப்படியானதற்கே
ற்றும் பிரபஞ்சமே தென்னில் - ரச்சுசர்ப்பம்
போலப் பிரபஞ்சமாரோபமானபடி யாலிது
பொருளல்ல.

(ச-கை-) பாம்பைப் போலிருக்கிற அதிட்
டானப்பழுதையினிடத்திற்பாம்பென்கிற பிர
மைவரத்தகும் நாமரூபமாகியபிரபஞ்சம்போ
லிராமனிர வயவமாயிருக்கிற பிரமத்தினிடத்தி
ற்பிரபஞ்சங்கற்பிதமென்னக் கூடாதென்னில்,

(உ-ம்-) சிவந்தரூபத்திற்கு உவமையல்லாத
படிகத்தினிடத்துவிரத்தபடிகமென்கிறவாரோ
பம்போலவுங்குங்குமம்போலிராத சங்கத்திற்கு
ங்குந்தமசங்கமென்கிறபிராந்தி போலவுங்கசப்
புக்குவமையிலாத வெல்லத்தைவெல்லங் கசப்
பென்கிறபிராந்திபோலவும் பிரபஞ்சம்போலி
ராதபிரமத்திற் பிரபஞ்சமாரோப மென்னத்த
கும் இப்படியாரோபமானபிரபஞ்சத்திற் கதி
ஷ்டானப்பொருள் தன்னைவிடவேறில்லாதபடி
யாலும்வஸ்துவென்றறிக. (௩௨)

நிஷ்ப்பிரபஞ்சன்.

பிரபஞ்சமற்றது நிஷ்ப்பிரபஞ்சம்-
பேதவாதிகள். (ச-கை)

சொர்க்காதி லோகம் வேணு மென்கி
றவனுக்குயாக முதலான சாதனங்களையுண்மை
யாகவிதித்தாற் போல மோட்சத்தைவிரும் பின
வனுக்கு பூர்த்தித்துவைதப் பிரபஞ்சத்தையழி
த்துக்கொள்ளவேணு மென்றுவேதஞ் சொன்ன
படிய விருட்டிலிருக்கிற பதார்த் தத்தையறிய
வேணுமென்ற வனுக்கதற் குத்தடையாயிருக்கி
றவிருட்டைப் போக்கிறுப்போலவும் நிஷ்ப்பி
ரபஞ்சப் பிரமத்தையறியவேணுமென்ற வனு
க்கதற்குத்தடையாயிருக்கிற பிரபஞ்சத்தைய
ப்பனை வேணும்ஆகையாற் பிரபஞ்சமிருக்
கையிலேயுமக்குநிஷ்ப்பிரபஞ்சப்பிரமமெப்ப
டிவெளியாம் நெய்யின் காரியமான கண்டங்க
ளையக்கினியுருக்கிக் கண்டங்களைலயம் பண்ணு
கிறுப்போலப்பிரபஞ்சத்தைலயம் பண்ணவே
ணுமென்னில்.

(உ-ம்.) பிரபஞ்சமுண்மையாகவுமதனைலய
ம் பண்ணுகிறதாகவும்வருப்பறும் தானாகத்தோ
ற்றுகிறதேகாதிகளென் றுந்தனைக் கன்னியமாகத்
தோற்றுகிற பிருதிவியாதிகளென் றுமிப்படி இ
ருவகையாகத் தோற்றும் பிரபஞ்சமெல்லா மு
ண்மைப் பொருளானாலொருபுருட னெத்தின
த்தாலழியப்படுகிறதல்லவென்றுத்தரம்-

(ச-கை-) வசிஷ்டர்பாக்கியவற்கர்- சுகர்- வா
மதேவர்- தட்சிணாமூர்த்தி- முதலான அனாதிமு
த்தராலே பிரபஞ்சமழியப்பட்டுதே அப்படியு



மக்குநிஷ்ப் பிரபஞ்சத்துவக்கியானம் வரவில்
லையெனின் முன்னுளநாதிமுத்தராலே பிருதிவு
முதலான பிரபஞ்சபதார்த்தமழியப் பட்டுதே
யாகிற் பிருதிவுமுதலானபிரபஞ்ச பதார்த்தமி
ப்போதிருக்கக் காணக்கில்லையாகையாலுண்மை
யாகவிருக்கிற பிரபஞ்சத்தையழிக் கச்சொன்
னதல்ல முண்மையில்லாத பிரபஞ்சத்தை இதுவில்
லை என்றழிக்கச் சொல்லிற்று அதெங்ஙனமென்
னில்

(உ-ம்-) பித்தகாசத்தாற்பிறைநாலுமூன்றா
கத்தோற்றினாலும் பிறையொன்றேயல்லாமலிர
ண்டில்லையென்றுகேட்டு நம்புகிறுப் போலவு
ஞ்சிலவுபாதியாற் சூரியன்பன்மையாகத்தோற்
றினாலுஞ் சூரியனொருவனென்றே யறிகிறுப்
போலவுமகண்டசின்மாத்திர மாயிருக்கிற நம்
மிடத்திலக்கியானகற் பிதத்தாற் கற்பிதமானநா
மரூபப் பிரபஞ்சந்தோற்றுகிறுப் போலவுமி
ருக்கிறுப்போலவு மழிகிறுப் போலவுமவத்தா
த்திரயத்திலுங்கண்டிதமல்லாமில்லை நீயொருவ
னுமேயுண்மைப்பொருளென்கிற வேதவுபதே
சத்தைக்கேட்டுநிலைநின்ற தீரனுக்குச் சொப்ப
னப்பிரபஞ்சம் போற்சகலப் பிரபஞ்சமுமில்
லையென்றனுபுத்தியிலழியுமென்றுத்தரம்- இப்ப
டிமுக்காலத்திலுமில்லாத பிரபஞ்சத்தை வேத
வுபதேசத்தாலில்லையென்றழித்துச் சின்மாத்தி

ரமாகவுறைத்துநிலைநிற்கிறதேநிஷ்ப் பிரபஞ்ச
த்துவக்கியானமானபடியால் நாமெப்போதும்
நிஷ்ப்பிரபஞ்சனென்றறிக. (௩௩)

## நானாரூபன்.

அனேகரூபமாயிருக்கிறவன் நானாரூபன்.
(ச-கை.) இவையெல்லாம்பிரமமல்லவென்
று வேதவாக்கியத்திற் பிரபஞ்சத்தைத் தடை
த்தத்துவைதசின்மாத்திரமாகவேதப்பிரமத்தை
நிலைநிறுத்தி யிருக்கப்பிரமம் நானாரூபமென்
பதெப்படியென்னில்.
(உ-ம்-) வெகுவிதமாகப்பிறந்திருக்கிற சல
ங்களிற் சூரியனொருவனே அனேகரூபமாய்த்
தோற்றுகிறதுபோல அனேகரூபியாயிருக்கிற
அவித்தையாவுபாதியாலொரு பிரமசைதன்னி
யமனேக ரூபம்போற்றோற்றினதாலனேக ரூ
பமென்கிறதுஉபசாரமாகையாலவித்தையாகற்
பிதம்பரசுபாவம்அப்படிபேதமென்பதால் நாம்
நானாரூபனென்றறிக. (௩௪)

## அபேதன்.

பிரத்தியட்ச மாகக்காணப்படுகிற தேசபேதம்
பூதபேதந்தேகபேதமிந்திரியபேதஞ் சீவபே
தமீசுவரபேதமென்று தோற்றுகிற மாயாகாரி
யத்திற்குமிதற்குக்காரணமாயிருக்கிற மாயைக்
குமதீதமானசைதன்னியமாய் சச்சிதானந்தரூ
பமாயிருக்கிற நம்மைவிட்டுப் பேதமாயொரு
ரூபமில்லாமையால் நாமபேதனென்றறிக. ( )



## நிர்விசேஷன்.

விசேஷமற்றது நிர்விசேஷம் விசேஷமென்ப
தேற்றந்தாழ்ச்சி இதுமேலநிற்கிறதாகவுமிருக்கிற
தாகவும் படுக்கிறதாகவுமோடுகிறதாகவுங் கோ
ணலாகவுஞ் செம்மையாகவும் நாலுமூலையாகவு
ம்வட்டமாகவும் ஒருசாய்ப்பாகவுமுயர்ந்ததாக
வுந்தோற்றுகிற மனிதவிசேஷம் மிருகவிசேஷ
ம்பாப்பு புலிவிசேஷம் விருட்சவிசேஷங்கொ
டிவிசேஷஞ்சுவர்விசேஷம் முற்ற[illegible]
ணைவிசேஷங் கோபுரவிசேஷமு[illegible]லவி
சேஷபதார்த்தங்களுடனே கூடிய[illegible]டி
வையடைந்தாற்போலவும் அந்த[illegible]றித்
பட்டதுபோலவுந் தோற்றுகிற வெய்யிலேசரூ
பமாய்விபுவாய் நிர்விசேஷமாயிருக்கிறது வெ
ய்யிலுக்குச்சுபாவம் முன்சொன்னவிசேஷவே
ற்றுமைகளுந் தொழில்களுமில்லாமல் வெய்யி
லொன்று தானேசகலமுமறிகிறதுபோல அக
ண்டசச்சிதானந்தமாயிருக்கிற பிரமம் முன்
சொன்ன விசேஷங்களுடனே கூடியதந்தத்
தொழிற் பொருந்தினதுபோல விருந்தாலுமத்
தனைகளுடனுந்தொடர்பற்ற அசங்கசித்தரூப
மாய்நிர்விசேஷமாகவே யிருக்கும்பிரமமென்
றுசொன்னபடிக்குஞானிகளுங் கண்டவிசேஷ
பதார்த்தங்களிலொன்றுடனுந் தொடர் பற்றி
ருக்கிறதன்னிடத்தில் விளங்கிறதாகவேதினைத்த
நுபவிக்கிறபடியாலுமே நிர்விசேஷனென்றறிக

## சர்வாபாவன்.

சச்சிதானந்தத்தைத் தவிர மற்றரூபப்பத்தைந்து தத்துவப் பிரபஞ்சமும் நினைவிலே மெய்போலத்தோற்றினது அந்தநினைவுபொய்யானபடியால்நனவிலே மெய்போலத்தோற்றின பிரபஞ்சமும்பொய்யே இந்தரூபப்பத்தைந்து தத்துவமும் பிராகபாவம் பிரத்வம்சாபாவமன்னி[illegible]ன்னியாபாவ மத்தியந்தாபாவமாகையாற் சகலப்பிரபஞ்ச[illegible] சாதிக விசாதிக சுவகதபேத[illegible]ஸ்துவைத்தவிரவில்ல [illegible]ஞ் சச்சிதானந்தபிரம[illegible]விர[illegible]ப்பத்தைந்து தத்துவமும்பொய்யாயொருக்காலுமில்லாதப்படியால் நாம் சர்வாபாவனென்றறிக (௩௭)



## சர்வதோமுகன்.

ஒருகாலத்தி லுண்டொருகாலத்திலில்லை என்கிற காலபரிச்சேத மொருதேசத்தி லுண்டொருதேசத்திலில்லை என்கிறதேசபரிச்சேத மொருதிக்கி லுண்டொரு திக்கிலில்லைஎன்கிற திக்குபரிச்சேதமொரு வனத்திலுண் டொரு வனத்திலில்லைஎன்கிறவனப் பரிச்சேதமொரு வாசிரமத்திலுண்டொரு வாசிரமத்திலில்லை என்கிற வாசிரமபரிச்சேதமிதுகளெல்லாமெட்டுத்திக்கும் கீழ்மேலடிமுடி எங்குமற்றுச்சர்வத்திரபரி பூரணமாயிருக்கிறபடியாலும்சர்வதோமுகனென்றறிக. (௩௮)

முற்றிற்று.